*Advanced technical studies*

* 32 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Finance be pleased to stated whether the United States of America Government have selected any candidates this year from this State for advanced studies in the United States of America who would serve as teachers in the Technical Institutes in India after their training?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

*Government Hospital, Sirkali*

***33 *Q.*—SRI C. MUTHIAH :** கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) சீர்காழி தாலூகா தலைமை ஆஸ்பத்திரி எப்போது சர்க்கார் வசமாயிற்று ?

(ஆ) அதன் பின் இதுவரையில் அதில் நடந்த அபிவிருத்தி வேலைகள் என்னென்ன ?

(இ) புதிதாக கட்டிடங்கள் கட்டவும், கருவிகள் வழங்கவும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) From 1st December 1956.

(*b*) None so far.

(*c*) The following proposals are under consideration :—

(i) Construction of additional ward of 20 beds.

(ii) Construction of an X-ray Block.

(iii) Construction of an overhead tank with pipe connections.

SRI C. MUTHIAH : இப்பொழுது இருக்கிற ஆஸ்பத்திரியில் இட நெருக்கடி மிகுதியாக இருக்கிறது; வேறு ஆறு ஏக்கர் நிலம் பக்கத்தில் இருப்பதால் அங்கு "எக்ஸ்ரே", புதிய வார்ட் முதலிய வைகளை கட்டினால் அதிகப்படியாக செலவு செய்யப்படும் பணம் நல்ல முறையில் செலவு செய்யப்படுமென்று எழுதியனுப்பி அது நிராகரிக்கப்பட்டு விட்டது. அதிகப்படியான பணம் அங்கு செலவு செய்யப்படும்போது அவைகளை நல்ல இடத்தில் அமைப்பதற்காக அதை மீண்டும் பரிசீலனை செய்ய அரசாங்கம் உத்தரவிடுவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : தற்போது இந்த சௌகரியங்களை எல்லாம் ஏற்படுத்த டிஸ்ட்ரிக்ட் மெடிகல் ஆபீஸர் சிபார்சு செய்திருக்கிறார்கள். அது பரிசீலனையில் இருக்கிறது. கனம் அங்கத்தினர் சொல்வது பெரிய விஷயம். அதை இப்பொழுது கவனிப்பதற்கில்லை.

SRI K. B. S. MANI : ஒரு பக்கம் லூதரன் மிஷனுக்கு சொந்தமான பாதிரியார் வீடும், பின் பக்கம் வாய்க்காலும் இருப்பதால், சீர்காழி ஆஸ்பத்திரி கட்டிடத்தை விஸ்தரிக்க இடம் கிடையாது. ஆகவே அதை வேறு ஒரு இடத்திற்கு மாற்றினால் ஒழிய சர்க்கார் திட்டப்படி கட்டிடம் கட்டவோ அல்லது மற்ற சிபார்சுகள் அமுல் நடத்தவோ இடவசதி கிடையாது. ஆகவே அந்த ஆஸ்பத்திரியை பக்கத்திலுள்ள இடத்திற்கு மாற்றியமைத்து அங்கு இந்த கட்டிட விஸ்தரிப்புத் திட்டத்தை ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்த இடத்தை வந்து பார்க்கத் திட்டமிடுகிறேன்.